Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு



**தமிழ் வளர**

தமிழ்மொழி வளர வேண்டுமென்ற மனப்பான்மை மட்டும் இருந்தால் போதாது, சுவையும் பயனுமுள்ள ஏடுகளையே படிக்க வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**திருமணம்**

திருமணம் என்பது மணமக்களை மட்டும் பொறுத்ததல்ல. நாட்டின் முன்னேற்றத்திலும் தொடர்பு கொண்டிருக்கிறது.

தந்தைபெரியார்



மலர்: 7 சென்னை: 5 - 9 - 1983 திங்கள் வெளியூர்: 6 - 9 - 1983 செவ்வாய் இதழ் 316



## செப்டம்பர் 13-ல் கழகத் தலைமை செயற்குழுக் கூட்டம்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத் தலைமை செயற்குழுக் கூட்டம், வருகிற 13-9-83 அன்று (செவ்வாய்க்கிழமை) காலை 10 மணிக்கு கழக அவைத் தலைவர் உயர்திரு ஈ.வெ. அ வள்ளிமுத்து எம். எல். சி. அவர்கள் தலைமையில், மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் முன்னிலையில் சென்னையில் நடைபெற உள்ளது.

செயற்குழு உறுப்பினர்களுக்கு அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டுள்ளன.

உறுப்பினர்கள் தவறாது கலந்துகொள்ளகேட்டுக் கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சென்னை 14
5-9-83

## பத்து ஆண்டுகளுக்கு தேர்தலில் நிற்க மாட்டோம் எனக் கூறுவது ஏன்?

# தி.மு.க.வின் பரிதாப நிலை

## பேரறிஞர் அண்ணா பவளவிழா!

இம்மாதம் 15-ந் தேதி பேரறிஞர் அண்ணா அவர்களது பவளவிழாவையொட்டி மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் மதுரை மாநகரில் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்து உரை ஆற்றுவார்கள்.

-ஜெயலலிதா
கொள்கை பரப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்.

சென்னை-14.
5-9-83

## கருணாநிதி புலம்பலுக்கு புரட்சித்தலைவர் சூடு

சென்னை, செப். 5- தி. மு. க. இனி ஆட்சிக்கு வரமுடியாது என்று மக்கள் தெளிவாகத் தெரிவித்து விட்டார்கள். அதனால் தான் இலங்கைக்கு இந்தியப்படை சென்றால் 10வருடம் தேர்தலில் நிற்கமாட்டோம் என்று கருணாநிதி கூறுகிறார். தி.மு.க. வின் பரிதாப நிலை இதுதான் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

சென்னையில் எம். ஜி ஆர். மன்ற நகர ஒன்றிய செயலாளர்கள் கூட்டம் நடந்தது. அதன் பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

பேட்டிவிவரம்வருமாறு:

கேள்வி: புதிய அமைச்சர்கள் எப்போது அறிவிக்கப்படுவார்கள்?

முதல்வர்: இன்னும் இரண்டு மூன்று நாட்களில் சொல்கிறேன். அவர்கள் 5அல்லது6 நாட்களில் பதவி ஏற்பார்கள் என கருதுகிறேன்.

கேள்வி:- இலங்கை தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் உங்களைசந்தித்தாரே! அவர் என்ன பேசினார்?

முதல்வர்:- அமிர்தலிங்கம் டெல்லி சென்று பிரதமரை சந்தித்துப் பேசிய பிறகு தான் அங்கு (இலங்கையில் என்ன நடந்ததுஎன்பதைச் சொல்லமுடியும்.

### மத்திய அரசின் அக்கறை

ஒருவகையில், மத்திய அரசு இலங்கைத் தமிழர் பிரச்சினையில் மிகவும் அக்கறையோடு செயல்படுகிறது என்பது அவருடைய எண்ணம் என்பதைத் தெரிவித்தார்.

பிரதமர் இந்திராவின் தூதர் ஜி. பார்த்தசாரதி மிகவும் திறமையாக பிரச்சினையைக்கையாண்டார் என்பது அவரது முதல் கருத்து.

கேள்வி: நெல்லையில் தி. மு. க. தொண்டர் அணியினர் கைது செய்யப் பட்டிருக்கிறார்களே?

முதல்வர்: தடை செய்யப்படுவதுராணுவப்பயிற்சி போன்றவைகளைத்தான். உடற்பயிற்சி செய்யும் யாரையும் குற்றம்சொல்ல மாட்டோம். அது பள்ளியிலேயே சொல்லித்தரப் படுகிறது.

ஒரு கட்சியின்

(2-ம் பக்கம் பார்க்க)

## பிரவீணா மரணம்

2-ம் பக்கம்



நேற்று நடைபெற்ற எம். ஜி. ஆர். மன்ற நகர, நகரிய, ஒன்றிய செயலாளர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டோர்

# புரட்சித்தலைவர் பேட்டி

(முதல் பக்கத்தொடர்ச்சி)

தலைவரைக் காப்பாற்று வதற்காகநாங்கள் பயிற்சி கொடுக்கிறோம் என்று சொல்லிவிட்டு ஓய்வு பெற்ற ராணுவவீரர் களையும் போலீசாரையும் வைத்து பயிற்சி அளிப் பதை எப்படி அனுமதிக்க முடியும்?

இதே கருணாநிதி ஆர்.எஸ்.எஸ்.இயக்கத்தி னர் லட்டியை வைத்துக் கொண்டு பயிற்சி பெறு கிறார்கள். அதை தடுக்க வேண்டும் என்றார். அவ ருக்கு ஒரு நீதி,மற்றவர் களுக்கு ஒரு நீதி என்பது கூடாது.

பொதுக்கூட்டம், ஊர் வலம், மாநாடு போன்ற வைகளை அனுமதிபெற்று யாரும் நடத்தலாம். ஏதாவது அசம்பாவிதம் ஏற்பட்டால் அவர்கள் பொறுப்பேற்க வேண்டும். அதுவரை பிரச்னை இல்லை.

கேள்வி: இன்று நடை பெற்ற மன்ற செயலாளர் கள் கூட்டத்தில் என்ன பேசினீர்கள்?

## தி. மு. க. வன்முறை

முதல்வர்: நேற்றும் இன்றும் நடந்த (ஒன்றிய செயலாளர்கள், எம். ஜி ஆர்.மன்றசெயலாளர்கள்) கூட்டத்தில், தி. மு. க. வினர் வன்முறையால் எங்கள்கட்சி தொண்டர் கள் கொடுமைப்படுத்தப் படுகிறார்கள், தாக்கப்படு கிறார்கள் என்ற குற்றச்சாட்டு கூறப்பட் டது. அதற்கு பாதுகாப்பு வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்'

ஒருசில இடங்களில் காவல்துறையில் இருப்ப வர்கள்கூடதி.மு.க.வினரின் வன்முறை செயலைத் தடுப்பதில்லை என்றும் தாக்கப்பட்ட எங்கள் கட்சிக்காரர்கள் மீதே வழக்குப் போடுகிறார்கள் என்றும் தங்களுடைய வேதனையை எடுத்துச்சொல்லி சில வழக்குகளுக்கானரிக்கார்டு களையும் காட்டினார் கள். தழும்புகளையும் காட்டினார்கள்.

அவர்களை அமைதிப் படுத்தி இதுபற்றி காவல் துறை மேலதிகாரிகளிடம் யாராக இருந்தாலும் வன் முறைக்கு காரணமானவர் களின் செயலை அனுமதிக் கக்கூடாது என்று நான் கூறுகிறேன் என்று அவர் களுக்கு சமாதானம் சொன்னேன்.

கேள்வி: தனி ஈழம் பெற்றுத் தந்தால் 10 ஆண்டுகள் நாங்கள் ஆட் சிக்கு வர மாட்டோம் என்று உங்களையும் சேர்த்து கருணாநிதி பேசி யிருக்கிறாரே?

முதல்வர்; பண்ருட்டியில் பொதுக்கூட்டத்தில் கருணாநிதி பேசும் போது "இலங்கைத்தமிழர்களுக்கு தனிநாடு வேண்டுமென்று சொல்லுகிறோம். நாளைக்கே இலங்கையை நோக்கிஇந்திய ராணுவம் சென்று படையெடுத்து அங்கே இலங்கையில் உள்ள தமிழனுக்கு தனி நாடு அமைத்துக் கொடுப் பீர்களேயானால், 10 ஆண்டு காலத்திற்கு திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வர விரும்பாது; நீங்களே தமிழ் நாட்டை சேர்த்து ஆளுங்கள் என்று என் சார்பில் மட்டுமல்ல, எம்.ஜி.ஆர். சார்பிலும் சொல்லுகிறேன்; இந்திரா காங்கிரஸ் ஆண்டு தொலையட்டும். தமிழ னுக்கு ஈழத்தமிழகத்தை வாங்கித் தருமேயானால். அதற்கான முயற்சிகள் எதுவும் மேற் கொள்ள முடியாத சூழ் நிலைஇருப்பதாகஇந்திரா காந்தி அம்மையார் நினைத்து ஒரு தூது வரை இலங்கைக்கு அனுப்பியுள்ளார்கள்" என்று பேசியுள்ளார்.

## விந்தை

மறுநாள் நிருபர்கள், கருணாநிதியிடம் "10 ஆண்டுகள் இந்திரா காங்கிரஸ் ஆளட்டும் என்று தி. மு. க. சார்பி லும் எம். ஜி. ஆர். சார் பிலும் சொன்னீர்களே" என்று விளக்கம் கேட்ட னர்.

அதற்கு கருணாநிதி, "தனித் தமிழ் ஈழம் அமைக்கப்படுமானால் தி.மு கசார்பில்மட்டுமல்ல அ.தி.மு.க. விலுள்ள தனி ஈழம் ஈமம் விரும்புகின்ற

நண்பர்கள் சார்பிலும் 10 ஆண்டுகளுக்கு தேர் தலில் நிற்கமாட்டோம் என்று பண்ருட்டியில் பேசி னேன்" என்று தெளிவு படுத்தினார்.

ஒரு கட்சித் தலைவர் இன்னொரு கட்சி யைப் பார்த்து "நான் போட்டி போடுவதில்லை நீங்களே ஆட்சி செய்யுங் கள்" என்று சொல்கிற விந்தையை இப்போது தான் கேட்கிறோம். தமிழ்நாட்டில் பல கட்சி கள் உள்ளன. அவர்கள் போட்டிபோட மாட்டார் களா?

## தி. மு. க. வின் பரிதாப நிலை

அவர்கள் (தி. மு. க.) பரிதாபத்திற்குரிய நிலைமை இதுதான். இனி அவர்கள் ஆட்சிக்கு வர முடியாது என்பதை மக்கள் தெளி வாக தெரிவித்து விட்டார் கள் என்பது அவர்கள் வார்த்தை வாயிலாக வெளிவந்து விட்டது.

முதல் நாள் கூட்டத் தில் என் பெயரையும் சேர்த்துப்பேசிவிட்டு பத்தி ரிகை நிருபர்களிடம் விளக்கம்சொல்லுவதாகக் கூறி என் கட்சியிலுள்ள நண்பர்கள் பற்றி சொன் னேன் என்பதை அரசியல் அரிச்சுவடி படித் துக் கொண்டிருக்கின்ற வர்கள் கூட ஏற்றுக் கொள்ள மாட் டார்கள்.

## புலம்பல்

தன் கட்சிக்காரர்கள் தன்னைவிட்டுப்போகாமல் தடுக்க இவருடைய பலவீனத்தை அவர்கள் தெரிந்து கொள்ளாமல் மறைக்க ஏதேதோ பேசு கிறார். சிறந்த தமிழ் தெரிந்தவர். ஆகவே புலம்புகிறார் என்ற வார்த்தையைப் பயன் படுத்த விரும்பவில்லை.

இனியாவது நாட்டின் நலனுக்குஇலங்கைத்தமிழர் களுக்கு எது பயனுள்ள தாக இருக்குமோ அதைச் செய்யவேண்டும் என்று அவரை நான் மிகவும் வேண்டி கேட்டுக் கொள் கிறேன்.

கேள்வி:- இன்று நடந் ததுபோல் மீண்டும் கூட் டம் எப்போது நடை பெறும்?

முதல்வர்:- அக்டோபர் மாதம் கடைசி வாரத்தில் கழகத்தின் நகர, நகரிய ஒன்றிய செயலாளர்களை யும் எம். ஜி. ஆர். மன்ற உறுப்பினர்களையும் கொண்ட ஒரு கூட்டம் நடத்தப்பட இருக்கிறது. இதற்குள் இவர்களுடைய பிரச்சினை தீர்ந்ததா? இன்னும்என்னபிரச்சினை உள்ளன? கட்சியின் பணி, எதிர்கால திட்டம் பற்றி அப்போது பரிசீலிக்கப் படும்.

## 13-ந் தேதி கழக செயற்குழு

இம்மாதம் 13ந் தேதி காலை 10 மணிக்கு கழ கத்தின் தலைமை செயற் குழு கூட்டம் தலைமை நிலையத்தில் நடைபெற இருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறி னார்.

## பஸ் மோதி வாலிபர் மரணம்

சென்னை, செப். 5— பூந்தமல்லி அருகேயுள்ள நசரத் பேட்டையைச் சேர்ந்தவர் காந்திநாதன். (வயது 17)இவர் தனியார் கம்பெனி ஒன்றில் வெல்ட ராக வேலை பார்த்து வந் தார்.

வழக்கம் போல் நேற்று காலை இவர் கம்பெனிக்கு சைக்கிளில் வந்து கொண்டிருந்தார். அப்போது காஞ்சிபுரத்தி லிருந்து வந்த பஸ் மோதி யது அதே இடத்தில் காந்திநாதன் மரண மடைந்தார்.

ஆர். எம். வீ. முன்னிலையில்

# தஞ்சை மாவட்டத்தில் ஆயிரம் பேர் கழகத்தில் இணைந்தனர்

**தஞ்சாவூர், செப். 5- தி.மு.க. இ. காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சிகளைச் சேர்ந்த 1047 பேர் அமைச்சர் ஆர். எம். வீ. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.**

தஞ்சை மாவட்டம் குத்தாலத்தில் தமிழரசன் தலைமையில் கழகப் பொதுக்கூட்டம் நடை பெற்றது.

அமைச்சர் ஆர்.எம்.வீ. விஜயபாலன் எம்.எல்.ஏ, பாலசுப்ரமணியம்எம்.எல் ஏ., வி. ஆர். கே.பழனி யப்பன். திருவாரூர் தென் கோவன், ரத்தினம், ஜெயச்சந்திரன், கோவி. நாராயணசாமி, சக்கர வர்த்தி ஆகியோர் இக் கூட்டத்தில் பேசினர்,

பல்லவராயன்குப்பம் சுப் பையா தலைமையில் 24 பேரும், ஆலங்குடி காசி தலைமையில் 100 பேரும், தொழுதாலங்குடி கோவிந்தராஜ் தலைமை யில் 64 பேரும், மேலையூர் ஜெயராஜ் தலைமையில் 120 பேரும், குணதலைப் பாடி ராம்தாஸ் தலைமை யில் 85 பேரும் திருவாடு துறை மோகன் தலைமை யில் 75 பேரும், கடலங் குடி பவுனியன் தலைமை யில் 62 பேரும் இந்தக் கூட்டத்தில் அமைச்சர் ஆர், எம். வீ. முன்னிலை யில் கழகத்தில் இணைந் தனர்,

அதேபோல நெய்க் குப்பை நாகையன் தலை மையில் 26 பேரும், கோனேரி ராஜபுரம் பிச்சை தலைமையில் 130 பேரும், கீழவயலூர் அந்தோணிசாமி தலைமை யில் 52 பேரும், வைகல் மாரிமுத்து தலைமையில் 16 பேரும், சிவனாகரம் மணி தலைமையில் 95 பேரும் அந்தோணியார்புரம் பிச்சைநாதன் தலைமை யில் 58 பேரும், அரைய புரம் சுப்ரமணி தலைமை யில் 55 பேரும், கொழை யூர்ராஜேந்திரன் தலைமை யில் 85 பேரும் கழகத்தில் இணைந்தனர்.

இந்தக் கூட்டத்தில் கழகத்தில் இணைந்தவர் களின் எண்ணிக்கை 1047 ஆகும் இதில் திமுகவினர். 697 பேர் இ. காங்கிரசார் 300 பேர், கம்யூனிஸ்ட் கட்சியினர் 50 பேர்.

தேர்வில் முதலிடம் பெற்ற

## மாணவிக்கு முதல்வர் மோதிரம் பரிசு

சென்னை, செப். 5— முதல்வர் புரட்சிதலைவர் திருச்செந்தூர் அருகே புன்னக்காயிலுக்குச் சென் றிருந்தபோது அங்கு அவருக்கு 7.650 கிராம் மதிப்புள்ள தங்க மோதிரம் ஒன்றுஅளிக்கப் பட்டது.

பள்ளி இறுதித் தேர்வில் முதலிடம் பெறும் மாணவருக்கு இந்த மோதிரத்தை வழங்குவதாக முதல்வர் புரட்சித்தலைவர் அப் போது அறிவித்திருந்தார்.

அதன்படி, பள்ளி இறுதி தேர்வில் 500-க்கு 477 மார்க்குகள் வாங்கி முத லிடம் பெற்ற மதுரை கே. புதூரைச் சேர்ந்த மாணவி லிமாபாலினுக்கு இன்று 5ந் தேதி மாலை வள்ளுவர் கோட்டத்தில் நடக்கும் விழாவில் அந்த மோதிரம் பரிசாக வழங்கப்படுகிறது முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் அமைச் சர் அரங்கநாயகம் அந்த மோதிரத்தை வழங்கு கிறார்.

ஆசிரியர் தினம்

# எல்லோருக்கும் கல்வி தருவதே இந்த அரசின் நோக்கம்

## முதல்வர் புரட்சித்தலைவர் செய்தி

**சென்னை. செப் 5- எல்லோருக்கும் கல்வி அளிப்பதே இந்த அரசின் குறிக்கோள் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கருத்து வெளியிட் டுள்ளார்**

ஆசிரியர் தினத்தை ஒட்டி முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிட்டுள்ள வாழ்த்துச் செய்தியில் கூறி இருப்பதாவது:-

தமிழகத்தில் தோன்றி உலக மக்கள் அனைவரின் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரிய வராகத்திகழ்ந்தமாமேதை- தத்துவஞானி டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்களின் பிறந்த நாளான செப்டம்பர் 5ம் தேதியை ஆசிரியர் திரு நாளாகக் கொண்டாடி வருகிறோம்,

இத்திருநாளையொட்டி ஆசிரியர் பெருமக்கள் அனைவருக்கும் என்னு டைய நல்வாழ்த்துக் களையும், வணக்கங் களையும் அன்புடன் தெரி வித்துக்கொள்கிறேன்.

கல்விக்கண் திறக்குப் ஆசிரியப்பணியில் ஈடுபட் டுள்ளவர்களுக்கு சமு தாயம் எந்த அளவு கடமைப் பட்டுள்ள தென் பதை எடுத்துக் காட்டு வது ஆசிரியர் திரு நாளின் முக்கிய நோக்க மாகும்

## எல்லோருக்கும் கல்வி

எல்லோருக்கும் கல்வி என்கிற குறிக்கோளின் அடிப்படையில் அரசு செய லாற்றி வருகிறது.

ஆசிரியத் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கு ஊதி யத்திலும், பணி பாதுகாப் பிலும் இருந்த குறைபாடு கள் படிப்படியாக நீக்கப் பட்டு அரசின் இதர ஊழி யர்களைப்போலவே ஆசிரியப் பெருமக்கள் மதிக்கப்படுகிற நிலை ஏற்பட்டுள்ளது என்றா லும் கல்வியினால் மாணவர்களுடைய எதிர் காலம் செம்மைப்படுத்தப் படுகிறதா? நாட்டின் வருங்காலத்தை உருவாக் கும் வகையில் அறிவும், ஆற்றலும், தேக உழைப் பில் ஆர்வமும், ஒழுக்க மும், கட்டுப்பாடும்நாட்டுப் பற்றும் கொண்ட மாண வர்கள் உருவாக்கப்படு கிறார்களா என்ற வினா இன்று எழுந்துள்ளது. கல்விஎன்பதுஉழைப்பின் மேன்மையை உணர்த்துவ தாகவும், பண்பட்ட இதயங்கள்உருவாக்குவ தாகவும் அமைந்திட வேண்டும்,

## இதயப்பண்பு வளர்ப்பீர்

இதயத்திற்கு "தேவைப் படும் கல்வியை புத்தகங் களால் மட்டும் ஊட்டிவிட முடியாது. ஆசிரியரின்உயி ரோட்டமுள்ள தொடர்பு களின் வாயிலாகத்தான் மாணவர்களிடம் இதயப் பண்புகளை வளர்க்க இயலும்" என்று மகாத்மாகாந்திஅடிகள் கூறினார்.

இதயப் பண்புகளை மாணவர்களிடம் வளர்க்க ஆசிரியர்கள் தங்களை முழுமையாக ஒப்படைத் துக் கொள்ளவேண்டும். இவ்வகையில் கடமையாற்றி சமுதாயச் சிற்பிகளாக ஆசிரியர்கள் விளங்கிடும் வகையில் மேன்மையான தொண் டாற்ற உறுதி ஏற்கவும், ஆசிரியப் பெருமக்க ளுக்கு நமது சமுதாயத் தின் ஒட்டுமொத்த மரி யாதையினையும் நன்றி யினையும் தெரிவிக்கவும் இந்நாளை நாம் பயன் படுத்திக்கொள்வோமாக.

ஆசிரியர் நல தேசியநிறு வனம் நடத்தும் ஆசிரியர் திருநாள் நிகழ்ச்சிகள் வெற்றியுடன் நடைபெற எனதுஇனியநல்வாழ்த்துக் களைத்தெரிவித்துக்கொள் கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தம் வாழ்த்துச் செய்தியில் கூறியுள்ளார்.

## அமெரிக்க விண்வெளி ஓடம்: தரை இறங்கியது

கலிபோர்னியா, செப்.5 இந்திய செயற்கைக் கோள் இன்சாட்டை ஏற்றிச் சென்ற அமெரிக்க விண் வெளி ஓடம் சேலஞ்சர் இன்று வெற்றிகரமாக தரை இறங்கியது.

மொத்தம் 6 நாட்கள்விண் வெளியில் சுற்றி வந்த சேலஞ்சர் இன்று இந்திய நேரப்படி மதியம் 1 10மணிக்கு கலிபோர்னி யாவில் உள்ள விமான தளத்தில்பத்திரமாகதரை இறங்கியது.

இந்த விண்வெளி ஓடத் தில் 5 பேர் பயணம் செய் தது நினைவிருக்கலாம்.

சினிமா டைரக்டர்

# பாக்கியராஜ் மனைவி பிரவீணா மரணம்

## மலர் மாலை வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் அஞ்சலி

**சென்னை, செப். 5- சினிமா டைரக்டர் பாக்கியராஜ் மனைவி பிரவீணா இன்று (5-ந்தேதி) காலை மரணமடைந்தார். முதல்வர் புரட்சித்தலைவர் மலர் மாலை வைத்து இறுதி அஞ்சலி செலுத்தினார்.**

பிரபல நடிகரும், டைரக்டருமான கே.பாக் கியராஜின் மனைவி பிரவீணா இருவரும் 1980 ஜூலையில் காதல் திருமணம் செய்துகொண் டனர்.

'பசி, 'பாமாருக்மணி' உட்பட பல்வேறு சினிமா படங்களில் நடித்தவர் பிர வீணா அவருக்குவயது 25.

சில நாட்களுக்கு முன்பு பிரவீணாவுக்கு மஞ்சள் காமாலை நோய் ஏற் பட்டது.

அதற்காகசென்னையில் நாட்டு வைத்திய முறை யில் சிகிச்சை பெற்று வந் தார்.

பின்பு குண்டூரில் உள்ள தனது தாயார் வீட்டிற்கு பாக்கியராஜுடன்சென்று அங்கு சிகிச்சைபெற்றார்.

நோயின் கடுமைகுறைந் ததால் பாக்கியராஜ் சென்னை திரும்பினார்.

அதன் பிறகு பிரவீணா குண்டூர் ஆஸ்பத்திரி யில் சேர்க்கப்பட்டார். அங்கு அவர் உடல் நிலை மோசமடைந்ததில் சென்னைக்கு அழைத்து வரப்பட்டு தனியார் ஆஸ்பத்திரி ஒன்றில் அனு மதிக்கப்பட்டார்.

அங்கு பிரவீணாவுக்கு தீவிர சிகிச்சை அளிக்கப் பட்டும் சிகிச்சை பயன் அளிக்காமல் உடல்நிலை மோசமடைந்து உணர் விழந்தார்.

பிரவீணாவுக்கு சிங்கப் பூர் அமெரிக்காவிலிருந்து மருந்துகள் தருவிக்கப்பட்டு சிகிச்சைஅளிக்கப்பட்டது.

முதல்வர் புரட்சித் தலைவர், சென்னை பொது மருத்துவமனை டாக்டர்கள் மூலமும் சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்தார்.

கடந்த சில நாட்களாக தொடர்ந்து உணர்விழந்த நிலையில்இருந்தபிரவீணா வின் உடல்நிலை இன்று காலை மிகவும் மோச மடைந்தது.

காலை 10-18 மணிக்கு பிரவீணாவின் உயிர் பிரிந் தது. அப்போது பாக்கிய ராஜும் மற்றும் உறவினர் களும் உடனிருந்தனர்.

பிரவீணாவின் உடல் 10-45 மணிக்கு நுங்கம் பாக்கத்தில் உள்ள பாக்கியராஜின் இல்லத் திற்குஎடுத்துவரப்பட்டது

அங்கு ஏராளமான கலையுலகத்தினர் வந்து அஞ்சலி செலுத்தினர்.

முதல்வர் புரட்சித்தலைவர் தனது துணைவியார் ஜானகி அம்மையாருடன் 12.25 மணிக்கு பிரவீணாவின் உடலுக்கு மலர் மாலை வைத்து அஞ்சலிசெலுத்தி னார்.

சுமார் அரைமணிநேரம் அங்கு இருந்த முதல்வர் புரட்சித்தலைவர் கதறி அழுத பாக்கியராஜுக்கு ஆறுதல் கூறினார்.

அமைச்சர் திருநாவுக் கரசு, மேலவைத்துணைத் தலைவர் புலமைப்பித்தன் ஆகியோர் பிரவீணாவின் உடலுக்குமலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத் தினர்.

சினிமா டைரக்டர்கள் ஏ.எஸ். பிரகாசம், பாரதி. ராஜா, துரை, எஸ். பி முத்துராமன், அவிநாசி மணி, நடிகர்கள் ராஜேஷ் விஜயகாந்த், நடிகைகள் ராதிகா, சரிதா, சசிகலா, பூர்ணிமா ஜெயராம், மற் றும் ஏவி. எம். சரவணன் எம். எஸ். விசுவநாதன், சங்கர் கணேஷ் ஆகியோ ரும் பிரவீணா உடலுக்கு மலர் வளையம்வைத்து அஞ்சலி செலுத்தினர்.

பிரவீணாவின் இறுதிச் சடங்குகள் இன்று மாலை 5 மணிக்கு நடக்கின்றன.

நுங்கம்பாக்கம்இடுகாட் டில் பிரவீணாவின் உடல் தகனம் செய்யப்படுகிறது,

பம்பாய் விபச்சார விடுதியிலிருந்து

# தப்பி வந்த நெல்லை பெண்கள்: சென்னை பெண் போலீசார் மீட்பு

## பாதுகாப்புடன் சொந்த ஊருக்கு அனுப்பி வைக்கப்பட்டனர்

**சென்னை, செப். 5-பம்பாயில் விபச்சார விடுதியில் சிக்கிக் கொண்ட திருநெல்வேலியைச்சேர்ந்த இரண்டு பெண்கள் அங்கிருந்து தப்பி சென்னை வந்தனர். சென்னையில் அவர் களை பெண் போலீசார் மீட்டு பாதுகாப்புடன் ஊருக்கு அனுப்பி வைத்தனர்.**

இதுபற்றி போலீஸ்தரப் பில் கூறப்படுவதாவது:-

திருநெல்வேலியைச் சேர்ந்தவர்கள் ராணி (வயது 16) மேரி (வயது 16). இவர்கள் இருவரும் திருநெல்வேலியில் முந்திரி விற்றுப்பிழைத்து வந்தார் கள்.

நல்ல அழகிகளான இந்த இருபெண்களிடமும் ஒரு அம்மாள் வந்து, சென் னைக்கு வாருங்கள். அங்கு நல்ல வேலை வாங் கித் தருகிறேன் என ஆசை வார்த்தை காட்டினாராம்.

அந்த அம்மாள் கூறி யதை நம்பிய ராணியும் மேரியும் சென்னைக்கு அந்த அம்மாளோடு வந் தனர்.

சென்னை நகரில் ஓர் விடுதியில் அவர்கள் தங்கினார்கள்.

2 நாட்களுக்குப் பிறகு அந்த அம்மாள் பம்பாய் சென்றால் அதிக சம்பளத் தில் நல்ல வேலை கிடைக் கும் எனக் கூறினார்.

கையில் காசுஇன்றி வீட் டிற்குத் தெரியாமல் வந்து விட்ட ராணியும் மேரி யும் மேற் கொண்டு என்ன செய்வது எனத் தெரியாமல் பம்பாய் செல்லவும் சம்மதித்தனர்.

இதன் பிறகு அந்த அம்மாள் ராணியையும் மேரியையும் அழைத்துக் கொண்டு பம்பாய் சென்றார்.

பம்பாயில் ஓர் விபச்சார விடுதியில் ராணியையும் மேரியையும் தலா 5 ஆயி ரம் ரூபாய்க்கு அந்த அம்மாள் விற்றுவிட்டா ராம்.

விபச்சார விடுதியில் ராணியையும் மேரியை யும், தனிஅறையில் பூட்டி வைத்துக் கொடுமைப் படுத்தினார்களாம்.

## சித்திரவதை செய்தனர்

விபச்சாரத்தில் ஈடுபட மறுத்ததால் ராணியை யும் மேரியையும் அடித்து உதைத்து சித்திர வதை செய்தார்களாம்.

இதன் பிறகு 2 பெண் களையும் விபச்சாரத்தில் கட்டாயமாக ஈடுபடுத்தி னார்களாம்.

தினமும்சாப்பிடுவதற்கு சிறிதளவே களி மட்டும் கொடுத்தார்களாம். உடுத்துக் கொள்ளுவதற்கு கிழிந்த உடைகளே கொடுத்தனராம்.

இந்தக் கொடுமைகள் 2 மாதங்கள் நீடித்தன. ஒரு நாள் ராணி, மேரி, மற்றும் கேரளாவைச் சேர்ந்த லில்லி (வயது 27) ஆகிய மூன்று பேர்களும் அந்த விபச்சார விடுதியின் உரிமை யாளரான பெண் அசந் திருந்த நேரத்தில் அங் கிருந்து சுவர்ஏறிக்குதித்து தப்பி சுண்ணாம்புக் காளவாயில் விழுந்து பிறகு அப்பகுதியில்இருந்த தமிழர் வீடு ஒன்றில் அடைக்கலமாக புகுந்த னர்.

அந்தக் குடும்பத்தினர்

(3-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

அவர்களுக்கு உணவுஉடை கொடுத்து சென்னைக்கு அனுப்பி வைத்தனர். சென்னை சென்டிரல் வந்து சேர்ந்த அவர்கள் எங்கு போவது எனத் தெரியாமல் எழும்பூர் ரெயில் நிலையத்திற்கு வந்து சேர்ந்தனர்.

## பெண் போலீசார் மீட்டனர்

எழும்பூர் ரெயில் நிலை யத்தில் சில முரடர்கள் அந்த பெண்களை கேலி செய்தனராம். அப் போது அங்கிருந்த பெண் போலீசார் ராகினி, பார்வதி ஆகி யோர் அந்தப்பெண்களை மீட்டனர்.

போலீசார் நடத்திய விசாரணையில் மேற் கண்ட தகவல்கள் தெரிய வந்தன.

ராணியையும் மேரியை யும்இரண்டு பெண் போலீ சார் துணையோடு அவர் களின் சொந்த ஊரான திருநெல்வேலிக்குஅனுப்பி வைக்கப்பட்டனர்.

லில்லியை அவரது சொந்த ஊருக்கு அனுப்ப வும் ஏற்பாடு செய்யப்பட் டுள்ளது.

## 9½ ஆண்டுகளாக கோமா நிலையில் தீயணைப்பு படை வீரர்

அகமதாபாத், செப். 5— தீயணைப்புப் படையைச் சேர்ந்த ஒரு வீரர் கடந்த 9½ ஆண்டுகளாக உணர்வு இழந்த (கோமா) நிலையில் இருக்கிறார்.

இதுபற்றிய விவரமாவது:-

கசமியான் கோரி இவர் 1974ம் ஆண்டு ஒரு தீவிபத்தில் தீயணைப்புப் பணியில் ஈடுபட்டிருந்த போது விபத்து ஏற்பட்டு அகமதாபாத் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்.

அந்தவிபத்தில்கோரிக்கு மண்டை உடைந்தது. அன்று உணர்வு இழந்த கோரிக்கு இன்றுவரை உணர்வு திரும்பவே இல்லை. சுமார் 9½ஆண்டு காலமாகவே கோரி உணர்வு இழந்த (கோமா) நிலையில் இருக்கிறார்.

கோரி திரும்பவும் உணர்வு பெறுவதற்கான வாய்ப்பு இல்லை என்று டாக்டர்கள் அறிவித்துள்ளனர்.

எனினும் கோரிக்கு தீயணைப்பு படையில் இருந்து மாதந்தோறும் சம்பளம் வழங்கப்படுவதுடன் அவருடைய வைத்திய செலவு, மற்றும் 2 மகள்களின் திருமணச் செலவையும் தீயணைப்பு படையே ஏற்றுள்ளது,

## ரூ. 56 ஆயிரம் மோசடி: பாங்க் அதிகாரி சரண்

சென்னை, செப். 5— கர்னூல் ஸ்டேட் பாங்கில் அதிகாரியாக இருப்பவர் குமார் அதே பாங்கில் தலைமை எழுத்தர் விவேகானந்தா.

கர்னூல் ஸ்டேட் பாங்கில் வேறு ஒருவருக்கு 56 ஆயிரம் ரூபாய்க்கு'டி.டி' வந்தது. அதை இவர்கள் இருவரும் எடுத்துக் கொண்டு சென்னைக்கு வந்தனர்.

சென்னையில் உள்ள ஸ்டேட் பேங்க் ஒன்றில் குமார் அந்த டி. டி.யைக் கொடுத்து போலி கையெழுத்துப்போட்டு பணம் பெற்றார்களாம்.

சிலநாள் கழித்து விவகாரம் வெளியானதும் போலீசில் புகார் செய்யப்பட்டது. குமாரும், விவேகானந்தாவும் தலைமறைவாகி விட்டனர்.

இன்று சென்னை 3-வது மெட்ரோபாலிடன் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் பாங்க் அதிகாரி குமார் சரணடைந்தார்.

## லாரி மோதி லாரி டிரைவர் மரணம்

சென்னை, செப். 5— சென்னை வியாசர்பாடியைச் சேர்ந்தவர் முனுசாமி (வயது 50) இவர் தனியார் ஒருவரிடம் லாரி டிரைவராக வேலை பார்த்து வந்தார்.

நேற்றுமுன்தினம் இவர் திண்டிவனத்துக்கு லாரி ஓட்டிச் சென்றார்

தொழுப்பேடு என்ற ஊரில் ரோட்டின் ஓரத்தில் லாரியை நிறுத்தி டீ குடிக்கச் சென்றார் ரோட்டைக் கடக்கும் போது, பின்னால் வந்த லாரி இவர் மீது மோதியது

படுகாயமடைந்த முனுசாமி சென்னை அரசினர் பொது மருத்துவமனைக்குக் கொண்டு வரப்பட்டு அனுமதிக்கப்பட்டார். இன்று அவர் மரணமடைந்தார்.

### கொரிய விமானத்தை

## உளவு பார்க்க அனுப்பியோரே உயிர்பலிக்கு பொறுப்பு

### ரஷ்யா குற்றச்சாட்டு

**மாஸ்கோ, செப். 5- உளவு பார்ப்பதற்காக பயணிகள் விமானத்தைப் பயன்படுத்தியவர்கள் தான் அப்பாவி மக்கள் பலியானதற்குப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று சோவியத் யூனியன் குற்றம் சாட்டியிருக்கிறது.**

செய்வதையும் செய்து விட்டு பயணிகள் விமானத்தை நாங்கள் சுட்டதாகக் கூப்பாடு போடுகிறார்கள். எங்கள் மீது பழி சுமத்தும் அவர்களுடைய வீண் முயற்சி வெற்றி பெறப்போவதில்லை என்றும் சோவியத் யூனியன் குறிப்பிட்டு இருக்கிறது.

தென்கொரிய பயணிகள் விமானத்தில் உளவு பார்க்கும் கருவிகளைப் பொருத்தி சோவியத் மண்ணில் உளவு பார்த்துக் கொண்டே செல்ல ஏற்பாடு செய்த குற்றவாளிகள் தான் அந்த விமாத்னதில் பயணம் செய்த அப்பாவி மக்கள் பலியானதற்குப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று சோவியத் யூனியன் குற்றம் சாட்டியிருக்கிறது.

### சர்வதேச பாதையை விட்டுவிலகியது

தென் கொரியா அமெரிக்கச் சார்புடைய நாடாகும். இந்த நாட்டின் பயணிகள் விமானம்ஒன்று அமெரிக்காவில் நியூயார்க் நகரிலிருந்து தென் கொரியாவின் தலைநகரான சியோல் நகருக்குப் பறந்து சென்றது, இந்த விமானம்சர்வதேசவிமான போக்குவரத்துப் பாதையிலிருந்து வெகுதூரம் விலகி சோவியத்எல்லைக்குள் பறந்து சென்றது.

சோவியத் யூனியனின் நான்கில் ஒரு பகுதி ராணுவம் உள்ள முக்கிய ராணுவ கேந்திரங்கள் உள்ள பகுதி மீது தென் கொரிய விமானம் பறந்து சென்றது.

### உளவு கருவிகள் இருந்தன

இதனை சோவியத் போர்விமானங்கள் உடனடியாகக் கண்டுபிடித்து பின் தொடர்ந்தன. உளவுக் கருவிகளுடன் (காமிராக்கள்)பறந்த தென் கொரிய விமானத்துடன் தொடர்புகொள்ள முயன்றன. அந்த விமானத்தை தரையில் இறக்கவும் முயற்சி செய்தன. பலன் இல்லை எனவே தென் கொரிய விமானத்தை சோவியத் போர் விமானங்கள் சுட்டு வீழ்த்தின.

பயணிகள் விமானத்தை சுட்டு வீழ்த்தியதாக அமெரிக்காவும்ஜப்பானும் சோவியத் யூனியனை குற்றம் சாட்டின இதற்கு தற்போது சோவியத் யூனியன் பதில் அளித்திருக்கிறது.

பயணிகள் மரணமடைந்ததற்காக சோவியத் யூனியன் தமது ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்திருக்கிறது. அதே சமயத்தில் தென் கொரிய விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டதற்கு அந்த விமானத்தை சோவியத் மண்ணில்உளவு பார்ப்பதற்காகப் பயன்படுத்தியவர்கள் தான் பொறுப்பேற்க வேண்டும் என்று கூறியிருக்கிறது.

உளவு பார்க்கும் நோக்கத்துடன் சர்வதேச விமானப் போக்குவரத்துப் பாதையை விட்டு வெகு தூரம்விலகி தென்கொரிய விமானம் சோவியத் வான வெளிக்குள் பறந்தது. சோவியத் போர் விமானம் ஒன்று அந்த விமானத்தைப் பின் தொடர்ந்தது. தென்கொரிய விமானத்தின் விமானியுடன் தொடர்பு கொள்ள முயன்றது. ஆனால் அந்த விமானி எந்த பதிலும் கூறவில்லை. சோவியத்போர்விமானம் எச்சரிக்கை குண்டையும் வெடித்தது. பலன் இல்லை. தென்கொரிய விமானத்தை பத்திரமாக தரையில் இறக்க முயற்சி செய்தது. ஆனால் தென் கொரிய விமானத்தின் விமானி எதற்கும் பதில் அளிக்கவில்லை

தென் கொரிய விமானத்தைப் பின் தொடர்ந்து சோவியத் போர் விமானம் இரண்டரை மணி நேரம் பறந்தது.

### பயணிகள் விமான சமிக்ஞை இல்லை

பொதுவாக பயணிகள் விமானத்தில் ட்டுவிட்டு எரியும் விளக்கு எரிந்து கொண்டேசெல்லும்தென் கொரிய பயணிகள் விமானத்திலோ அந்தவிளக்கும் எரியவில்லை

தென்கொரிய விமானத்தின் விமானி எந்தப் பதிலும் அளிக்காது சென்றதால் உளவு பார்க்கும் நோக்கத்துடன் சோவியத் மண்ணில் பறந்த அந்த விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது.

இவ்வாறு சோவியத் செய்தி நிறுவனமான 'டாஸ்' அறிவித்திருக்கிறது.

தென் கொரிய பயணிகள்விமானத்தைசோவியத் மண்ணில் உளவு பார்க்கப் பயன்படுத்தியவர்கள் அமெரிக்க உளவு இலாகாவினர்தான். சோவியத் எல்லைக்குள் வரம்பு மீறி அந்த விமானம் பறக்கிறது என்பதனை அவர்களது அந்த விமானிக்குத் தெரிவித்திருக்கவேண்டும், ஏனெனில் தென்கொரிய பயணிகள் விமானம் பறந்து கொண்டிருந்ததை அமெரிக்கஉளவு இலாகா கண்காணித்துக் கொண்டு தான் இருந்தது என்றும் ''டாஸ்'' செய்தி நிறுவனம் குற்றம் சாட்டியிருக்கிறது.

பயணிகள் விமானத்தை உளவு பார்க்கப் பயன்படுத்துவது கொடும் குற்றமாகும். அந்த குற்றத்தை செய்தவர்கள் உலக அரங்கில் ஓர் பட்ட நிலையை ஏற்படுத்தும் நோக்கத்துடன் இப்போது சோவியத்யூனியனுக்கு எதிராகக் கூப்பாடு போடுகிறார்கள் என்று ''டாஸ்'' குறிப்பிட்டிருக்கிறது.

### அமைச்சர் கோவேந்தன் நடவடிக்கை

## வேலை நேரத்தில் அலுவலகம் வராத வார்டன் சஸ்பெண்ட்

**சென்னை செப். 5- மாணவ மாணவிகள் விடுதிகளில் வேலை நேரத்தில் வேலைக்கு வராத வார்டன்களை சஸ்பெண்ட் செய்யுமாறு அமைச்சர் கோவேந்தன் உத்தரவிட்டார்.**

பிற்பட்டோர் நலத் துறை அமைச்சர் கோவேந்தன் நேற்று காலை சென்னை திருவல்லிக்கேணி அப்துல் கரீம் தெருவிலுள்ள உயர்நிலைப் பள்ளிக்கூட மாணவிகள் விடுதியில்திடீர் சோதனை நடத்தினார்.

அப்போது விடுதியின் ''வார்டன்'' சரோஜா விடுதியில் இல்லை. அவர் ஏன் வரவில்லை என்று விசாரித்த போது அவர் தினமும் தாமதமாக காலை 10-30 மணிக்கு மேல்தான் விடுதிக்கு வருவதாகத்தெரியவந்தது.

மேலும் அந்த விடுதியில் ஒரு மாணவி காய்ச்சலால் அவதிப்பட்டு படுத்த படுக்கையாக இருப்பதை கவனிக்காமல், கவனக் குறைவாக வார்டன் இருந்தார் என்றும் புகார் கூறப்பட்டது.

இதையொட்டி விடுதி வார்டனை தற்காலிகமாக வேலை நீக்கம் செய்ய அமைச்சர் உத்தர விட்டார்

அதே போல் தியாகராய நகரில் உள்ள ஒரு விடுதியிலும்அந்தவிடுதிவார்டன் சரிவர வராததால் அவர் மீது நடவடிக்கை எடுக்குமாறு அமைச்சர் உத்தர விட்டார்.

### மாணவர்கள் மீண்டும் அனுமதி

அத்துடன் ந்த விடுதி மாணவர்கள் 4 பேர் ஒழுங்கீனமாக நடந்து கொண்டதற்காகவிடுதிவார்டனால் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருந்தனர்

அவர்கள் 4 பேரும் இனிமேல்ஒழுங்கீனமாகநடந்து கொள்ள மாட்டோம் என்று அளித்த உறுதி மொழியின் பேரில் அவர்களை மீண்டும் சேர்த்துக் கொள்ளும்படி அமைச்சர் தெரிவித்தார்.

பின்னர் அங்கே உள்ள பெண்கள் விடுதிக்கும் அமைச்சர் சென்று சோதனை நடத்தினார், உணவு நன்றாக இருக்கிறதா என்று ருசி பார்த்தார் அந்த விடுதி வார்டனும் குறித்த நேரத்தில் வராததால் அவர் மீதும் அமைச்சர் நடவடிக்கை எடுக்க உத்திரவிட்டார்.

மாணவ — மாணவிகள் விடுதிகளில் பணிபுரியும் வார்டன்கள் உணவு பரிமாறப்படும் நேரங்களில் குறிப்பாக காலையில் விடுதிகளில் இருக்க வேண்டும் என்று அமைச்சர் கூறினார்.

### நாளை மாலை

## சுங்குவார் சத்திரத்தில் அமைச்சர் எஸ். ஆர். ராதா பேசுகிறார்

சென்னை, செப். 5- இலங்கைத் தமிழர் படுகொலைகளைக் கண்டித்து நாளை மாலை 6.30 மணிக்கு சுங்குவார் சத்திரத்தில் கழகக் கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்திற்கு ஒன்றிய கழக பொறுப்பாளர் பிள்ளைப்பாக்கம் கே. மூர்த்தி தலைமை வகிக்க, அக்பர்அலி, செந்தாமரை இளவரசு, கிருஷ்ணன் முன்னிலைவகிக்கின்றனர். இரா. குமாரவடிவேலு வரவேற்புரையாற்ற அமைச்சர் எஸ். ஆர். ராதா சிறப்புரையாற்றுகிறார். காஞ்சி பன்னீர் செல்வம், ஜெபாலன், மண்ணடிகிருஷ்ணமூர்த்தி, பா. சிதம்பரம், பி. சுந்தரராமன், கே. காசி, முனுசாமி, சுப்பிரமணி, நடராசன், மணவாளன் உட்பட பலர் பேசுகின்றனர் டி. பி. கோவிந்தசாமி நன்றி கூறுகிறார்.

அண்ணாதாசன் கலை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

## கழக கொடிஏற்று விழா

செங்கல்பட்டு, செப். 5- திருப்பெரும்பூதூர் ஒன்றியம் திருமங்கலம் கிராமத்தில்நாளைமாலை 6 மணிக்கு கழகக்கொடி ஏற்றுவிழா நடைபெறுகிறது.

டி. பி. கோவிந்தசாமி தலைமையிலும், துலுக்காணம் முன்னிலையிலும் நடைபெறும் இந் நிகழ்ச்சியில் அமைச்சர் எஸ்.ஆர்ராதா கலந்து கொண்டுகழகக்கொடியை ஏற்றிவைக்கிறார்.

நிகழ்ச்சியில் காஞ்சி பன்னீர்செல்வம், ஒன்றிய கழக பொறுப்பாளர் பிள்ளைப்பாக்கம் கே. மூர்த்தி, இ. முனுசாமி, குமாரவடிவேலு, செந்தாமரை அக்பர்அலி கிருஷ்ணன் உட்பட பல கழகத் தோழர்கள் கலந்து கொள்கின்றனர்.

நடராசன் நன்றி கூறுகிறார்.

### இலங்கைத்தமிழர் உதவிநிதிக்கு

## மகாராஷ்டிர அரசு ரூ 10 லட்சம் நன்கொடை

பம்பாய், செப். 5— பிரதமர் இந்திரா காந்தியின் வேண்டுகோளை அடுத்து இலங்கைத் தமிழர்களுக்கு உதவ ரூ. 10 லட்சத்தை அதற்கான நிதிக்குமகாராஷ்டிர அரசு அளித்துள்ளது.

இதேபோல பீகார் மாநில உஷார் பிரிவு அதிகாரிகள் ஆயிரம் ரூபாயை மாநில முதல்வர் மூலம் பிரதமருக்கு அனுப்பி வைத்துள்ளனர்.

### ஆர். எம். வீ. வழங்கினார்

## ஓய்வு பெறும் ஆசிரியர்கள் 170பேருக்குபரிசு

**சென்னை, செப் 5- ஆசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெறும் 170 ஆசிரியர்களுக்கு அமைச்ச ஆர் எம் வீ பரிசுகளை வழங்கினார்.**

தமிழக பள்ளிக் கல்வித் துறையின் சார்பில் ஆசிரியர் தின விழா சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்றது. அமைச்சர் ஆர். எம். வீ. விழாவை துவக்கிவைத்து ஓய்வு பெறும் 170 ஆசிரியர்களுக்கு ''டிபன் கேரியர்களை'' வழங்கினார். மற்றும் கதை, கட்டுரைஎழுதுதல் பேச்சுப்போட்டி போன்றவற்றில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்கும் புத்தகங்களையும், நற்சான்றிதழ்களையும் அமைச்சர் வழங்கினார்.

விழாவில் அமைச்சர் ஆர் எம்.வீ.பேசிய போது கூறியதாவது:-

முன்னாள் ஜனாதிபதியாக இருந்த டாக்டர் ராதாகிருஷ்ணனின் பிறந்த நாளான செப்டம்பர் 5-ந்தேதியை ஆசிரியர் தினமாக கொண்டாடிவருகிறோம். நாம் சுதந்திரம் பெற்று 35 ஆண்டுகள்ஆகியும் கல்வி கற்பவர்களின் எண்ணிக்கை 100க்கு 55 பேர் என்ற விகிதத்தில் தான் உள்ளது. மாநில அரசு தனது வருவாயில் மூன்றில் ஒரு பங்கை கல்விக்காக செலவிடுகிறது.

மத்திய அரசும் பெரிய அளவில் கல்விக்காக செலவு செய்கிறது. அப்படி இருந்தும் கல்வி கற்பவர்கள் எண்ணிக்கை உயரவில்லை.

### ஆசிரியர்களின் லட்சியம்

ஆசிரியர்கள் மதிக்கப் படுகிறார்களா என்பதையும் ஆசிரியர்கள் தங்கள் தொழிலைமதிக்கிறார்களா என்பதையும் கணக்கு போட்டு பார்க்கும் விழா இது. பயிற்றுவிப்பதில் ஆசிரியர்களுக்கு ஒருபிடிப்பு இருக்கிறதா? லட்சியம் இருக்கிறதா என்பதை எங்களைப் போன்ற பெற்றோர்கள் எண்ணிப் பார்க்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது

ஆசிரியர்கள் மீது பழி சுமத்துவதாக தயவு செய்து கருதவேண்டாம். சிலகருத்துக்களை உங்கள் முன் பரிசீலனைக்குவைக்க விரும்புகிறேன்.

ஒரு குழந்தை பிறந்து வளர்ந்து வாலிபனாகும் 16 வயதுவரை யாருடன் அதிக அளவில் கூடிப் பழகினான் என்றால் தாயைவிட - தந்தையை விட-நண்பர்களைவிட ஆசிரியர்களிடம் தான் என்பதை யாரும் மறந்து விடக்கூடாது.

பச்சை மண்ணாக குழந்தைகளைஉங்களிடம் தருகிறோம். நீங்கள் பிள்ளையாராக பிடித்தால் பிள்ளையார் ஆகும். குரங்காக பிடித்தால் குரங்குதான் ஆகும். நான் பெற்றெடுத்தேன் என்பதற்காக என்னைப் போல் அமைவான்என்பது இல்லை.

நீங்கள் எந்த அடிப்

### சமுதாயத் தொண்டு

படையில் கற்றுக் கொடுக்கிறீர்களோ அந்த அடிப்படையில்தான் கல்வி கற்பான். எதைக் கற்றுக் கொடுக்கிறீர்களோ அதை கற்றுக் கொள்கிறான். எந்த பண்பின் அடிப்படையில்பயிற்றுவிக்கிறீர்களோ அந்த அடிப்படையில் அந்தப் பண்பைப் பெறுகிறான்.

தாய்தந்தைக்கு அடுத்த படியாக ஆசிரியரைமதிக்க வேண்டும். கல்வி கண்ணை திறக்கும் பணியில் ஈடுபடும் ஆசிரியர்கள் இதனை ஒரு தொழிலா, அல்லது வேலையா, கடமையா, தொண்டா என்று எண்ணிப் பார்க்கவேண்டும். இது ஒரு தொழில் அல்ல, இது ஒரு கடமை. சமுதாயத் தொண்டு.

ஆசிரியர்பணி என்பதை வாழ்க்கையில் கிடைத்த சிறந்த பேறாகக் கருத வேண்டும். பிள்ளையைப் பெற்றெடுத்துகண்திறந்து தாருங்கள் என்று உங்களிடம் ஒப்படைக்கிறோம்.

கடிகாரத்தைப் பார்த்து வேலை செய்து, காலண்டரைப் பார்த்து சம்பளம் வாங்க வேண்டும் என்ற பழக்கம் இல்லாமல் ஆசிரிய சமுதாயம் ஏற்றுக் கொண்டிருக்கும் பணியை செவ்வனே செய்யவேண்டும். எதிர்கால சந்ததியை உருவாக்கும் பணியை ஊனப்படுத்திவிடாதீர்கள். எதிர்கால சந்ததிக்கு வழிகாட்டும் பொறுப்பை ஏற்று இருக்கும் நீங்கள் உங்கள் கடமைகளை நிறைவேற்றித்தர வேண்டும் என்றுகேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

## மணப்பாறை, தீ விபத்து: 2 குழந்தைகள் மரணம்

திருச்சி, செப். 5- மணப்பாறையில் ஒரு குடிசையில் தீவிபத்து ஏற்பட்டு 2 குழந்தைகள் இறந்தன. அதில் ஒரு குழந்தை 2 மாத கைக் குழந்தையாகும். அடுப்பிலிருந்த தீ குடிசைக்குத் தாவியதால் இந்த தீ விபத்து ஏற்பட்டுள்ளது.

## கழகப் பொதுக்கூட்டம்

போடிநாயக்கனூர் ஒன்றிய இராசிங்கபுரத்தில் கழக சாதனை விளக்க கூட்டம் நாளை (செவ்வாய்) மாலை 7 மணி அளவில் ராஜ்குமார் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு, ஜக்கையன் எம். பி., கே. எம். எஸ் சுப்பிரமணியம் எம். எல். ஏ, ஒன்றிய செயலாளர் காமராஜ், நகரச் செயலாளர் ரெங்கராஜ், கொண்டரங்கி மற்றும் பலர் பேசுகின்றனர்.

### இலங்கையின் நிலவரத்தில்

## மாற்றம் ஏற்பட்டு உள்ளது:கொழும்புக்கு தமிழர்கள் வருகை

**கொழும்பு செப். 5-இலங்கையில் இப்போது ஒரு சகஜ நிலை ஏற்பட்டு இருக்கிறது. புதிய மனமாற்றம் ஏற்பட்டு இருப்பதாக செய்திகள் வெளி வந்துள்ளன:**

இலங்கையில் அண்மையில் ஏற்பட்ட கலவரங்களுக்குப்பிறகு ஒரு புதிய சூழ்நிலை ஏற்பட்டு இருக்கிறது.

இலங்கையில் தமிழர்களுக்கு எதிராகவன்முறை வெறியாட்டங்கள் நடைபெற்றதும், பலர் படுகொலைசெய்யப்பட்டதும் ஏராளமான தமிழர்களது சொத்துக்கள் நாசமாக்கப்பட்டதும் தெரிந்ததே.

### தமிழக அரசு முயற்சி

இலங்கைத் தமிழர் பிரச்னையில் ஒரு சுமுக முடிவு ஏற்பட தமிழக அரசும்- மத்திய அரசும் முயற்சிகளைமேற்கொண்டிருக்கிறது.

இலங்கைத்தமிழர் பிரச்னைக்கு ஒருநிரந்தர தீர்வு ஏற்பட வட்ட மேஜை மாநாட்டை நடந்த இந்தியா முயற்சி எடுத்துள்ளது.

இதற்கு சாதகமான சூழ்நிலை உருவாகி வருகிறது.

இலங்கைத்தமிழர் தலைவர் அமிர்தலிங்கத்துடனும் பேச்சுவார்த்தை நடத்தியுள்ளது.

### சகஜநிலை திரும்புகிறது

இத்தகைய சூழ்நிலையால் இலங்கையில் ஓரளவு சகஜநிலையும் சுமுக உறவும் மெல்ல மெல்ல ஏற்பட்டு வருகிறது.

கலவரத்தின் போது நடந்த மனமாச்சரியங்கள் ஓரளவு மறைந்து வரத் தொடங்கியுள்ளது.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் பிரதமர் இந்திராகாந்தி நேரிடையாக தலையிட்டதும், ஜி. பார்த்தசாரதியை அனுப்பியதும் நல்ல மாற்றத்தை உருவாக்கி இருக்கிறது.

கொழும்புக்குதமிழர்கள் வரத்தொடங்கிஉள்ளதாக செய்திகள் வருகின்றன. வடக்கு ஜாப்னா பகுதிகளில் இருந்து ரயில்கள் கொழும்பிற்கு வரத் தொடங்கி உள்ளன.

தமிழர்கள் இப்போது பெரும் அளவில் வரத் தொடங்கி விட்டனர். இப்படிப்பட்ட செய்திகள் இப்போது வரத் தொடங்கி உள்ளன.

## இளந்தம்பதிகள் உட்பட ஆறு பேர் 24 மணி நேரத்தில் ரயிலில் அடிபட்டு சாவு

சென்னை, செப். 5— இருபத்து நான்கு மணி நேரத்தில் நகரை ஒட்டிய வெவ்வேறு இடங்களில் ஒரு இளந் தம்பதிகள் உட்பட 6 பேர் மரணம் அடைந்துள்ளனர்,

சனிக்கிழமை காலையில் இருந்து ஞாயிற்றுக்கிழமை காலை வரை இந்த சம்பவங்கள் நடந்துள்ளன. இவர்களது உடல்கள் ரயில் தண்டவாள ஓரங்களில் கிடந்தன.

இப்படி இறந்த அறுவரில் இருவர் இளம்தம்பதிகள்.

கணவன் பெயர் சேகர். வயது 24. மனைவி பெயர் விஜயா, வயது 21. இந்த தம்பதிகளுக்கிடையே ஏதோ சண்டை சச்சரவு ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. இதன் விளைவு இருவரும் ரயில் முன்விழுந்து தற்கொலை செய்து கொண்டுவிட்டனர்.

இவர்களது உடல்கள் பெரம்பூர் ஸ்டேஷனுக்கும் ரயில் பெட்டி தொழிற்சாலைக்கும் இடையில் கிடந்தன.

திருவொற்றியூர்ரயில்வே ஸ்டேஷன் அருகே 45 வயது மதிக்கத்தக்க ஒருவரது உடலும், 55 வயது மதிக்கத்தக்க ஒருவரது உடலும் கிடந்தன.

இவர்கள் யார் என்ற விவரம் தெரியவில்லை.

ஆவடி ஸ்டேஷனில் இருந்துசற்றுத்தொலைவில் இவர்களதுஉடல்கள்கிடந்தன.

இதில் ஒருவருக்கு 30 வயதுஇருக்கும். மற்றொருவருக்கு 50 வயது இருக்கும், இவர்களும் யார் என்று அடையாளம் தெரியவில்லை.

பாகிஸ்தானுக்கு எதிராக விளையாடும்

# இந்திய அணியில் 3 தமிழக வீரர்கள்

ராஜ்காட், செப். 5— பாகிஸ்தானுக்கு எதிராகபெங்களூரில் செப்டம்பர் 14ந்தேதி துவங்கும் முதல் கிரிக்கெட் டெஸ்ட் போட்டிக்கான இந்திய ஆட்டக்காரர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட்டுள்ளன.

இந்த அணியில் தமிழகத்தைச் சேர்ந்த வெங்கட்ராகவன், ஸ்ரீகாந்த், எஸ். சிவராமகிருஷ்ணன் ஆகியோர் இடம் பெற்றுள்ளனர்.

அணி விவரம் வருமாறு: கபில்தேவ் (காப்டன்) சுனில்கவாஸ்கர், ஸ்ரீகாந்த் அஞ்சுமன் கெய்க்வாட் மொகிந்தர் அமர்நாத், யஷ்பால்சர்மா, சையத் கிர்மானி (விக்கெட்கீப்பர்) ரோஜர்பின்னி, மதன் லால், சந்தீப் பட்டீல், திலிப்வெங்சர்க்கார், எஸ். வெங்கட்ராகவன், எல். சிவராமகிருஷ்ணன், மற்றும் திலிப் தோஷி ஆகியோர் இந்திய அணியில்இடம்பெற்றுள்ளனர்.

உலகக் கோப்பைக்கான போட்டியில் பங்கேற்ற இந்திய அணியில் இடம் பெற்றிருந்த ரவிசாஸ்திரி இந்த அணியில் இடம் பெறவில்லை.

பிலிம் பேர் விருது

# சிறந்த தமிழ் கலைஞர்: பூர்ணிமாஜெயராமன் மோகனுக்கு விருது

**சென்னை, செப், 5 தென்னிந்தியமொழிப் படங்களுக்கான பிலிம்பேர் 30-வது விருது வழங்குவிழா நேற்று சென்னையில் நடைபெற்றது: சிறந்த தமிழ் நடிகர். நடிகைக்கான விருது மோகனுக்கும், பூாணிமாஜெயராமனுக்கும் வழங்கப்பட்டது**

பிலிம்பேர் 30-வது ஆண்டு விருது வழங்கு விழா நேற்று மாலை சென்னை மியூசிக்அகாடமியில் நடைபெற்றது. விழாவிற்கு மத்திய அமைச்சர் எஸ்.பி. சவான் தலைமை வகிக்கசிறப்புவிருந்தினராக கே. பாலசந்தர் விழாவில் கலந்து கொண்டார்.

தமிழில் சிறந்த படமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 'எங்கேயோகேட்ட குரல்' படத்துக்கான விருதை பஞ்சு அருணாசலத்தின் மனைவி மீனா ஏவி. எம். சரவணனிடமிருந்து பெற்றுக்கொண்டார்.

மூன்றாம்பிறைபடத்தின் மூலம் சிறந்த இயக்குனராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பாலுமகேந்திராவிற்கு ஜெமினிகணேசன் விருது வழங்கினார்.

பயணங்கள் முடிவதில்லை படத்தில் நடித்ததற்காக சிறந்த நடிகருக்கான விருதைப் பெற்ற மோகனுக்கு நடிகை சுவப்னாவிருதுவழங்கினார். அதே படத்தில் நடித்து சிறந்த நடிகைக்கான விருதைப்பெற்றபூர்ணிமா ஜெயராமுக்கு இந்தி நடிகர் பாருக்ஷேர் பரிசு வழங்கினார்

மேகசந்தேசம் படத்தை தயாரித்த தாசரி நாராயணராவுக்கு இசையமைப்பாளர் சக்ரவர்த்தியும் தெலுங்கில் சிறந்த நடிகராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சிரஞ்சிவிக்கு பி. சுசீலாவும் விருது வழங்கினர்.

கன்னடத்தில் சிறந்த நடிகையாக தேர்ந்தெடுக்கப்பட்டசரிதாவுக்கு பிரபு விருதுவழங்கினார்.

விருது வழங்கும் நிகழ்ச்சிக்கு முன் எஸ். பி. பாலசுப்பிரமணியம், பி. சுசீலா எஸ். பி. சைலஜா கலந்து கொண்ட இன்னிசை நிகழ்ச்சியும், கிரேஸி மோகன் குழுவினர் நடித்த 'மேரேஜஸ் ஆர் மேட் இன்சலூன் நாடகமும், கல்பனாஅய்யரின்டிஸ்கோ நடனமும் நடைபெற்றது.

விழாவிற்கு வந்தவர்களை பிலிம்பேர்பத்திரிகை ஆசிரியர் தர்னேஜா வரவேற்க, கிருஷ்ணமூர்த்தி நன்றி கூறினார்

நிகழ்ச்சி வர்ணனையாளர்களாக ரேவதியும், கல்பனா அய்யரும் செயல் பட்டனர்.

இந்தியாவில் தயாராகும் அன்னியவகை

# ஸ்பிரிட்டுக்கு தமிழக அரசு எக்சைஸ்வரி நீக்கம்

சென்னை, செப். 5— இந்தியாவில் தயாராகும் வெளிநாட்டு ஸ்பிரிட்டுக்கு எக்சைஸ் வரியில் இருந்து தமிழக அரசு விலக்கு அளித்துள்ளது

தமிழக அரசின் இந்த அறிவிப்பு அரசு கெஜட்டில் வெளியிடப்பட்டுள்ளது.

# ரஷ்யாவில் இந்திய வெளிநாட்டு அமைச்சர் நரசிம்மராவ்

மாஸ்கோ, செப். 5— இந்திய வெளி விவகாரத் துறை அமைச்சர் பி. வி, நரசிம்மராவ் ரஷ்யாவில் 2 நாள் அரசு முறையில் சுற்றுப்பயணம் செய்ய இங்கு வந்து சேர்ந்தார்.

விமான நிலையத்தில் அமைச்சர் நரசிம்மராவை ரஷ்ய வெளிவிவகாரத் துறை அமைச்சர் குரோமிகோ, மற்றும் பல அதிகாரிகளும் வரவேற்றனர்.

நிலப்பதிவு பணி முடிந்தவுடன்

# தமிழக விவசாயிகளுக்கு பாஸ்புத்தகம்: அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவிப்பு

**வேலூர், செப் 5- தமிழகத்தில் தற்போது நடந்துவரும் நிலப்பதிவு பணிகள் முடிந்தவுடன் விவசாயிகள் அனைவருக்கும் நிலஉடமை குறித்த பாஸ் புத்தகங்கள் வழங்கப்படும் என அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவித்துள்ளார்**

ஆற்காடு தாலுக்காவில் நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளில் அமைச்சர் எஸ். டி. எஸ். கலந்து கொண்டார்.

மண்ணடு என்ற இடத்தில் நடந்த நிகழ்ச்சியில் அமைச்சர் எஸ்.டி.எஸ் 1200 பேர்களுக்கு பட்டாக்களை வழங்கிப் பேசுகையில் கூறியதாவது:-

தமிழ்நாட்டில் தற்போது நிலப்பதிவுப் பணிகள் தீவிரமாக நடந்து வருகிறது.

166 வருவாய் வட்டங்களில் 108ல் நிலப்பதிவுப் பணிகள் முடிந்துவிட்டன. மற்ற வருவாய் வட்டங்களிலும் நிலப்பதிவுப்பணி நடந்து வருகிறது

## உதவிகள் சுலபமாக கிடைக்கும்

இந்தப்பணிகள் முடிந்தவுடன், விவசாயிகள் அனைவருக்கும் நில உடமை குறித்த பாஸ் புத்தகங்கள் அளிக்கப்படும்.

இந்த பாஸ்புத்தகத்தில் விவசாயிகளுக்குச் சொந்தமான நிலம் பற்றிய விவரங்கள் அடங்கியிருக்கும். இந்த பாஸ் புத்தகம் வைத்திருப்பதின் மூலம் அரசின் உதவிகள் சுலபமாக கிடைக்க வழி ஏற்படும்.

இதுவரை நிலப்பதிவுப் பணியை சுமார்20 ஆயிரம் பேர் 15 கோடி ரூபாய் செலவில் செய்துள்ளனர்

மாநிலத்தில் 12 லட்சத்து 50 ஆயிரம் பேர்களுக்கு நிலப்பட்டாஅளிக்கப்பட்டுள்ளது.

வறட்சிநிவாரணத்திற்கு அரசு இதுவரை 80 கோடி ரூபாய் செலவிட்டுள்ளது மத்திய அரசின் குழு 60 கோடி ரூபாய் அளிக்க சிபாரிசு செய்திருந்த போதிலும் மத்திய அரசு 45 கோடி ரூபாய்தான் தமிழகத்திற்குஅளித்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். பேசினார்.

முப்பட்டு வெட்டி என்ற ஊரில் மதிய உணவு மையத்தை அமைச்சர் எஸ். டி. எஸ். திறந்து வைத்தார்.

தாமரப்பாக்கம் கிராமத்தில் பள்ளிக்கட்டிடம் ஒன்றையும் அமைச்சர் எஸ் டி. எஸ். திறந்து வைத்தார்.



பாகிஸ்தானில்

# ராணுவ ஆட்சியை எதிர்த்து கடும்போர்: மேலும் பலர் சாவு

**கராச்சி செப் 5 பாகிஸ்தானில் அதிபர் ஜியாவை எதிர்த்து கடும் போர் நடந்து வருகிறது சாவு எண்ணிக்கை மேலும் உயர்ந்துள்ளது**

பாகிஸ்தானில் அதிபர் ஜியாஉல்ஹக்கின் ராணுவ ஆட்சியை எதிர்த்து கடும் போர் நடந்து வருகிறது. இந்தப் போராட்டம் இப்போது சிந்து மாகாணத்திற்கும் பரவியுள்ளது.

தடைசெய்யப்பட்டுள்ள பாகிஸ்தான் மக்கள் கட்சி தலைவர் முஸ்தபாஜதோயின் மகன் தலைமையில் ஆர்ப்பாட்டம் நடந்தது.

ஆர்ப்பாட்டக்காரர்கள் ஊர்வலமாகச் சென்றனர். அவர்கள் மீது போலீசார் கண்ணீர் புகைக் குண்டுகளை வீசினர்.

என்றாலும் ஊர்வலத்தினர் கலைந்து செல்லவில்லை. இதைத் தொடர்ந்து போலீசாருக்கும், ஆர்ப்பாட்டக்காரர்களுக்கும் இடையே பயங்கர மோதல் ஏற்பட்டது.

இதில் 5 போலீசாரும் ஆர்ப்பாட்டக்காரர்கள் இருவரும் இறந்தனர்.

போராட்டங்கள் காரணமாக இதுவரை 41 பேர் இறந்துள்ளனர்.

''போராட்டத்திற்குப் பணிய மாட்டேன்'' என்று அதிபர் ஜியா அறிவித்துள்ளார். என்ன தான் போராட்டம் நடந்தாலும் 1985 மார்ச் வரை ராணுவச் சட்டம் நீடிக்கும் அதன் பின் பொதுத் தேர்தல் நடைபெறும் என்று அதிபர் ஜியா அறிவித்துள்ளார்.

# புதிய 4 கட்சி கூட்டணி ஏற்பட்டது

புதுடெல்லி, செப். 5 அகில இந்திய அளவில் புதிதாக 4 கட்சி கூட்டணி ஏற்பட்டுள்ளது.

ஜனதா, காங்கிரஸ்(எஸ்) ஜனநாயகசோஷலிஸ்ட் கட்சி ராஷ்டிரியகாங்கிரஸ் ஆகிய 4 கட்சிகளும் சேர்ந்து இந்தஐக்கிய முன்னணியை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன.

சந்திரசேகர், சரத் பவார், எச். என் பகுகுணா, ரதுபாய்அதானி ஆகிய நால்வரும் இந்த முடிவை அறிவித்துள்ளனர்.

சட்ட மன்றங்களுக்கு உள்ளேயும், வெளியேயும் இந்த ஐக்கியக் கூட்டணி ஒன்றாகச் செயல்படும் என்று மது தந்தவதே அறிவித்துள்ளார்.

தீ விபத்தில் பாதிக்கப்பட்ட

மக்களுக்கு

# கழகத்தின் சார்பில் அரிசி வழங்கப்பட்டது

திண்டிவனம், செப் 5 திண்டிவனம் வட்டம் மரக்காணம் ஒன்றியம் சந்தைத்தோப்பில் 41 வீடுகள் தீவிபத்துக்குள்ளாயின.

இந்த விபத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஒன்றிய நகர கழக சார்பில் குடும்பத்திற்கு தலா 5 கிலோ அரிசி வழங்கப்பட்டது.

ம வ ஜெயராமன் தலைமையில் இந்த அரிசி வழங்கப்பட்டது.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு கழகத் தோழர்கள் ஆறுதல் கூறினர்.

# பரிசுச்சீட்டு முடிவுகள்

## உ. பி. ராபிள்

புதுடெல்லி, செப். 5 உ.பி. ராபிள் லாட்டரியின் 77 வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் விவரம் வருமாறு:-

முதல் பரிசு
(ரூ. 1 லட்சம்)
ஆர்ஆர் 357553 (கோவை)

2-வது பரிசு
(ரூ. 10 ஆயிரம்)
ஆர்பி 224587

3-வது பரிசு
(தலா ரூ. 1000)
ஆர் ஓ 313901 476645
ஆர் பி 473135 449850
ஆர் ஆர் 267826 117900

கீழ்க்கண்ட எண்களில்முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

4-வது பரிசு
(ரூ. 200) 7553

5-வது பரிசு
(ரூ. 50) 553

6- வது பரிசு
(ரூ 10) 53

7- வது பரிசு
(ரூ. 2) 3

8- வது பரிசு
(ரூ. 1) 4

## அருணாசலப் பிரதேசம்

அருணாசலப் பிரதேச லாட்டரியின் முதலாவது குலுக்கல்நேற்றுநடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(ரூ. 1 லட்சம்)
பி 245649

2 வது பரிசு
(தலா ரூ. 10 ஆயிரம்)
ஏ 214257 பி 328577
சி 168468

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
(தலா ரூ. 500)
38987 41752 65722
96461 48960 88285
67789 11697 47982
46145

4-வது பரிசு
(தலா ரூ. 50)
2854 8669 8149 6101
8440 2859 8980 7454
7250 9713

5-வது பரிசு
(தலா ரூ. 20)
8304 9386 1506 0500
0570 1987 8404 7622
8386 9466

6வது பரிசு
(தலா ரூ 10)
051 588 137 608 243 766
333 816 472 948

7வது பரிசு
(தலா ரூ, 5)
029 036 026 006 146
163 156 135 252 227
420 289 550 240 544
314 547 342 582 350
647 391 605 457 667
449 470 720 771 830
745 870 730 983 824
958 857 944 996

## பூடான்

பூடான் லாட்டரியின் 213 வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(தலா ரூ.1 லட்சம்)
ஒய் 430904
இசெட் 758958
ஏ 991026

ஆறுதல் பரிசு
(தலா ரூ. 1000)
இசெட் 430904 ஏ 430904
ஒய் 758958 ஏ 758958
ஒய் 991026 இசெட் 91026

2- வது பரிசு
(தலா ரூ 20 ஆயிரம்)
ஒய் 355256
இசெட் 690760
ஏ 437819

3-வது பரிசு
(தலா ரூ. 10 ஆயிரம்)
ஒய் 632718 301478
இசெட் 191854 632297
ஏ 280234 850769

(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

(4-வது பரிசு)
(தலா ரூ 1000)
64458 80653 58105
75080 89046 24501
78785 52150 04915
71772

5-வது பரிசு
(தலா ரூ. 50)
1813 5777 2087 8448
4769 9389 5707 7785
4978 9779

6 - வது பரிசு
(தலா ரூ. 20)
7710 5774 7048 5149
4040 4342 7560 6532
2787 0617

7 வது பரிசு
(தலா ரூ 10)
015 529 100 605
260 704 374 874
410 902

இலங்கைத் தமிழர்

நல நிதிக்கு

# ராதா- தியாகராசன் ரூ. 50 ஆயிரம் உதவி

மதுரை, செப். 5— மதுரை தியாகராஜா மில், கோவை சரோஜா மில்களின் நிர்வாகங்கள், மற்றும் தொழிலாளர்கள்சார்பாக ரூ.50 ஆயிரம் இலங்கைத் தமிழர் நிவாரண நிதிக்காக வழங்கப்பட்டது. தியாகராஜா மில் நிர்வாக இயக்குநர் டாக்டர் ராதா தியாகராஜன் இதற்கானகாசோலையை அமைச்சர் ஆர்.எம்.வீயிடம் வழங்கினார்.

# இன்னொரு கொரிய விமானம் எங்கே?

சியோல், செப். 5—ஜப்பானிலிருந்து கிளம்பிய இன்னொரு தென்கொரிய விமானத்தை காணவில்லை இந்த விமானத்தில் தென்கொரியாவைச் சேர்ந்த பத்திரிகை நிருபர்கள் பயணமானார்கள்.

ஏற்கனவே அமெரிக்காவிலிருந்து தென்கொரியாவிற்குச் சென்ற பயணிகள் விமானம் சோவியத் எல்லைக்குள் உளவுப் பார்த்துக் கொண்டே பறந்ததால் அந்த விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது.

அந்த விமானம்வீழ்த்தப்பட்ட பகுதிக்குச் சென்று செய்திகள் சேகரிப்பதற்காக ஜப்பானிலிருந்து ஒரு விமானத்தில் தென்கொரிய நிருபர்கள் சென்றனர்.

அவர்கள் சென்ற அரைமணி நேரத்திற்குப் பின்னர் அந்த விமானத்திற்கும் விமான நிலையத்திற்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லாது போய்விட்டது. அந்த விமானத்தை தேடிக் கொண்டு இருக்கிறார்கள்.



சூரிய விசைப் பலகை விரியாமல்

# இந்திய இன்சாட் ராக்கெட்டில் கோளாறு: சீராக்க விஞ்ஞானிகள் இடைவிடாத முயற்சி

பெங்களூர், செப். 5— விண்வெளியில் இந்தியா தவழவிட்ட விண்வெளி ராக்கெட் இன்சாட்டில் திடீரென்று கோளாறு ஏற்பட்டு இருக்கிறது.

இந்த ராக்கெட்டுக்குத் தேவையான மின்சாரத்தை தயாரிக்கக் கூடிய சூரிய விசைப் பலகைகள் விரியாமல் உள்ளதாக தகவல் ஒன்று தெரிவிக்கிறது.

இந்தியாவில் தயாரிக்கப்பட்ட தகவல்தொடர்பு செயற்கைக்கோள் அமெரிக்க தளத்தில் இருந்து விண்வெளிக்கு கொண்டு செல்லப்பட்டு விண்வெளித் தடத்தில் வெற்றிகரமாக ஏவிவிடப்பட்டது தெரிந்ததே.

எல்லாம் நல்ல முறையில்இயங்கிவெற்றிகரமாக செயல்பட்டு வந்த நேரத்தில் திடீரென்று சிறு சோதனை ஏற்பட்டு இருக்கிறது

இந்த ராக்கெட்டை 8ம்தேதியேவிண்வெளியில் நிலை நிறுத்த விஞ்ஞானிகள் திட்டமிட்டு இருந்தனர்.

இந்த இன்சாட் ராக்கெட்டுக்குத் தேவைப்படும் மின்சாரத்தை உற்பத்தி செய்து கொள்ள கருவிகள் பொருத்தப்பட்டுள்ளன.

இதற்கு 5 சூரியவிசைப் பலகைகள் அமைக்கப்பட்டுள்ளன

இந்த ஐந்தும் பூமியை நோக்கி செங்குத்தாக விரிந்து நிற்பதுடன் சூரியனை நோக்கியபடி அமைந்திருக்க வேண்டும்.

அப்படி அந்தப் பலகைகள் விரியும் போது அந்தப் பலகைகள் மீது சூரிய ஒளி முழுமையாகிவிடும். அதன் மூலம் மின்சாரம் உற்பத்தியாகி ராக்கெட் இயங்க உதவும்.

ஆனால் இப்போது வந்துள்ள சோதனை அந்தப் பலகைகள் சூரியனைப் பார்த்து விரியவில்லை.

இந்தப் புதிய சிக்கலை சீராக்க முடியும் என்று இந்திய விஞ்ஞானிகள் நம்பிக்கையோடு முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர்.

இந்தியாவில் உள்ள நிபுணர்களும், கலிபோர்னியாவில் உள்ள நிபுணர்களும் தீவிர முயற்சிகளை மேற்கொண்டு இருக்கிறார்கள்.

இந்தப் பலகைகளை விரியவைக்க ஞாயிறு காலை 5.45 மணிக்கு ஹாசனில் உள்ள கட்டுப்பாடு நிலையத்தில் இருந்து கட்டளை பிறப்பிக்கப்பட்டது:

பலகைகள் விரிந்தன. ஆனால் அவை சூரியனைப் பார்த்தபடி இல்லை.

தேவையானால் இந்தப் பலகைகளை சூரியனைப் பார்த்து விரியச்செய்ய சிறு ராக்கெட்டுகளை இயக்கிஇன்சாட் குலுக்கப்படும் என்று ஒரு அதிகாரி தெரிவித்தார்.

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D. M. K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS-600 029.

EDITOR: E. PARASURAMAN